உ

தொல்காப்பியத்தேவர்

இயற்றிய

# திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்.



இஃது

இராமசந்திரபுரம்,

ஸ்ரீமான்

தீ. நா. நாச்சியப்ப செட்டியாரவர்களும்

ஸ்ரீமான்

தீ. சோ. முருகப்ப செட்டியாரவர்களும்

செய்த பொருளுதவியால்

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உ. வே. சாமிநாதையரால்

பரிசோதிக்கப்பெற்று



சென்னை:

கமர்ஷியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப் பெற்றது.

இரண்டாம் பதிப்பு.

காளயுக்தி௵ மாசி௴

1919.

விலை அணா 4.]

## முகவுரை



திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகமென்பது, திருப்பாதிரிப் புலியூரென்னுந்தலத்திற் கோயில்கொண்டெழுந்தருளிய சிவபெருமான்மீது தொல்காப்பியத்தேவரென்னும் பெரியோரால் இயற்றப்பெற்றது; இதிலுள்ள செய்யுட்டொகை க0க (பாயிரம் க; நூல் க00.) இந்தத் தலம், நடுநாட்டிலுள்ள தேவாரம்பெற்ற சிவஸ்தலங்களுள் ஒன்று; இதற்குரிய பதிகம் உ (திருஞா. பதி. க; திருநா. பதி. க.) வடமொழி தென்மொழியிரண்டிலும் இதற்குப் புராணங்களுள்ளன; இப்போது அச்சிடப்பெற்று வழங்கும் தமிழ்ப்புராணம், திருவாவடுதுறையாதீனவித்வானும் சற்றேறக்குறைய நாறுவருஷங்களுக்கு முன்பிருந்தவருமாகிய இலக்கணம் ஸ்ரீ சிதம்பரநாதமுனிவராலியற்றப்பெற்றது. விசாரித்தபொழுது, இத்தலத்துத் திருக்கோயிற் கருப்பக்கிருகத்தின் மேல்புறச்சுவர்ச் சிலாசாஸனத்திலுள்ள, "தழைத்ததிருப்பாதிரிப் புலியூர்" என்பது முதலிய இரண்டுசெய்யுட்களால், *கன்னிவனப்புராணம், புலியூர்நாடகமென்னும் இரண்டுநூல்கள் ஒரேபுலவரால் இயற்றப்பெற்று இத்தலத்திற்கு உரியனவாயிருந்தமை வெளியாகின்றதென்றும் சிலாசாஸனங்களில் ஸ்வாமி திருநாமம் கடைஞாழல் மஹாதேவரென்றே வழங்கப்படுகின்றதென்றும் திருவனந்தபுரம் சிலாசாஸனபரிசோதனைத்தலைவராயிருந்த அன்பர் ஸ்ரீ து. அ. கோபிநாதராவ் அவர்கள் M. A., சொன்னார்கள். அந்நூல்கள் இக்காலத்து யாண்டுள்ளனவோ? சிறிதும்விளங்கவில்லை; நிற்க.

கலம்பகமாவது, தமிழ்ப்பாஷையிலுள்ள தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்று; இதன் இலக்கணம் பன்னிருபாட்டியல் முதலியவற்றால் விளங்கும்.

இந்நூலாசிரியராகிய தொல்காப்பியத்தேவரென்பவர், சிவாலயமொன்றைக் கட்டுதற்காகச் செங்கல் அறுக்கச்

* இப்புராணமே இக்கலம்பகத்துள்ள சில வரலாறுகளுக்கு ஆதாரமாக இருத்தல்வேண்டும்.

சொன்னபொழுது, திருப்பாதிரிப்புலியூர்க்கோயில் விசாரணைக்காரர்கள்கோபங்கொண்டு இவரைநோக்கி, "நீர் இங்ஙனஞ்செய்வித்தல் முறையோ" என்றுகேட்டனர். உடனே இவர், "வேத மொழிவிசும்பு மேனி" (உ - ஆம் பாடல்) என்னும் ஒரு வெண்பாவைக்கூறி அதன்முகமாகத் தமது கருத்தை வெளிப்படுத்தினர். அவர்கள், இவரது கருத்தை நன்குணர்ந்து ஆறுதலுற்று, இவருடைய பக்திமிகுதியையும் கல்விவன்மைமுதலியவற்றையும் இவர்சிறந்த ப்ரபந்தவாக்கியாயிருத்தலையும் அறிந்து விம்மிதமுற்று இவரைநோக்கி, "தேவரீர் இவ்வெண்பாவை இடையே அமைத்துத்திருப்பாதிரிப்புலியூர்ச்சிவபெருமான்மீது கலம்பகமொன்றுபாடியருளுக" என்று வற்புறுத்தி வேண்டிக்கொள்ள, அங்ஙனமே தேவர் இந்நூலைப் பாடிமுடித்தனர். அப்பால் இது சிறந்த கவிஞர்களாற்பாராட்டிப் படிக்கப்பெற்றுத்தமிழ்நாடெங்கும் பரவிவழங்கலாயிற்று. அக்காலத்தில், சிதம்பரத்துள்ள அடியார்குழாங்கள், அங்கேதரிசனத்திற்குவந்த இரட்டையர்களை நோக்கி, "திருப்பாதிரிப் புலியூர்க்குத் தொல்காப்பியதேவர் இயற்றியதுபோல நீங்கள் இத்தலத்திற்கு ஒருகலம்பகமியற்றியருளவேண்டும்" என்று வேண்டினர். இரட்டையர்கள்,

> *"தொல்காப்பியத்தேவர் சொன்னதமிழ்ப் பாடலன்றி
> நல்காத் திருச்செவிக்கு நாமுரைப்ப தேறுமோ
> மல்காப் புனறுதும்ப மாகிலத்திற் கண்பிசைந்து
> பல்காற் பொருமினர்க்குப் பாற்கடலொன் றீந்தார்க்கே"

என்னும் செய்யுளைக்கூறி, "சிவபெருமான்மீது கலம்பகம் பாடுதற்கு யாம் வல்லேமல்லேம்"என்றனர்கள். கேட்டவர்கள் அதனால் தடைப்படாமல் பின்னும் வற்புறுத்த, அவர்கள் அப்பொழுதும் துணிவின்றி இக்கலம்பகச்சுவடியிற் கயிறு சார்த்திப் பார்த்தார்கள். அப்பொழுது, "பாடுவார்பாடும்" (கூ) என்னும் இந்நூற்பாடல் அகப்பட்டது. அதனைக்

---

*இச்செய்யுள் தமிழ்நாவலர் சரிதையிலும் திருவாமாத்தூர்க் கலம்பக ஏட்டுப் பிரதிகளிலும் காணப்படுகின்றது.

கண்ணுற்று அப்புலவர்கள் அதன் பின்னிரண்டடியின் பொருளையறிந்து மனமுருகி, தம்மைப்பாடும்படி ஸ்ரீ ஆநந்த நடராஜரே கட்டளையிட்டருளியதாக நினைந்து தில்லைக் கலம்பகத்தை இயற்றி முடித்தார்கள். இவ்வரலாறு **தமிழ் நாவலர்சரிதை**யி லிருந்து ஊகித்தறிந்து எழுதப்பெற்றது.

**தில்லைக்கலம்பகம்**, **தெய்வீகவுலா** முதலியவற்றைப் பாடியருளியவர்களும் சிவபக்திச்செல்வம் வாய்ந்தவர்களும் "கலம்பகத்திற்கிரட்டையர்கள்" எனப்புகழப்பெற்றவர்களு மாகிய அப்பெரியோர்களே பாராட்டிப் புகழ்ந்தனரென் றால், இந்நூலாசிரியரின் மேன்மையும் இந்நூலின் பெரு மையும் என்னுடைய சொல்லில் அடங்குவனவோ!

இரட்டையர்களுடைய காலத்திற்கு முற்பட்டவரெ ன்று தெரிதலால், இந்நூலாசிரியர், அவர்களாற் பாடப் பெற்ற **வரபதியாட்கொண்டா**னென்னும்பிரபுவுக்கும் அவன் விருப்பத்தின்படி பாரதம் பாடிய **ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வா** ருக்கும் அவர் காலத்தவர்களாகிய **ஸ்ரீஅருணகிரியார்** முதலிய பெரியோர்களுக்கும் முன்பிருந்தவராக எண்ணப்படுகிறார்.

திருவாமாத்தூர்க் கலம்பக முதலியவூற்றில் இந்நூலின் கருத்துக்களைப்பரக்கக் காணலாம். கெடிலநதி இத்தலத்திற் குத் தெற்கே ஓடிக்கொண்டிருந்ததென்பதும், **தில்லைமூவா யிரவர்** போன்ற குழாத்தினராகிய **முந்நூற்றுறுபது அந்தணர் கள்** ஒரு நாளைக்கு ஒருவராகப் பூசித்து வந்தனரென்பதும் முதலிய பண்டை வரலாறுகள் இந்நூலால் அறியலாகும்.

மேற்கூறிய தமிழ்நாவலர்சரிதையால் இந்நூலுண் டென்பதை யறிந்து யான் பலவிடத்தும் தேடிக்கொண்டி ருக்கையில் வளவனூர் ம-ா-ா-ஸ்ரீ **தேசிகசடகோபபிள் ளையவர்கள்** இந்நூல் ஏட்டுப்பிரதிகள் இரண்டை அனுப்பி னார்கள். முன்னர்ப் பழக்கமில்லாமலிருந்தும் தாமாகவே பிரதிகளை அனுப்பியுதவிய அவர்களுடைய தமிழ்ப்பாஷாபி மானமும் அன்பும் மிகப் பாராட்டற்பாலன.

பின்னும் சிலபிரதிகளைத் தேடி ஆராய்ந்து பதிப்பிக்க நான் எண்ணியிருந்ததுண்டு; ஆயினும், சென்ற பிலவங்க

வருஷம் தைமாசத்தில் நடந்த ஸ்ரீபிரஹந்நாயகியம்மையின் மஹாகும்பாபிஷேகத்துக்குள் வெளியானால் இதுபலர்க்கும் பயன்படுமென்று திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் மடத்துத் தலைவர்களும் வித்தியாபரிபாலகர்களுமாகிய ஸ்ரீமத் சிவஷண்முகமெய்ஞ்ஞானதேசிகரவர்கள் வற்புறுத்தி எழுதினமையால், இதன் முதற்பதிப்பை ஷை கும்பாபிஷேக காலத்துக்குள் வெளியிடலானேன்.

பின்பு செய்துவந்த ஆராய்ச்சியால், ஊகித்தறிந்த சில திருத்தங்கள் இவ்விரண்டாம்பதிப்பில் அமைக்கப்பெற்றன.

திருப்பாதிரிப்புலியூர்க்கோயில் தருமகர்த்தாவும் அத்தலத்தில் லக்ஷக்கணக்கான பொருளைச் செலவிட்டுச் செவ்வனே பலவகைத் திருப்பணி செய்தவர்களும் செய்துவருபவர்களுமாகிய புதுக்கோட்டையைச் சார்ந்த இராமசந்திரபுரம் ஸ்ரீமான்-தீ. நா. நாச்சியப்ப செட்டியாரவர்களும் ஸ்ரீமான் தீ. சோ. முருகப்ப செட்டியாரவர்களும் இவ்வரிய நூலின் முதற்பதிப்பிற்கும் இப்பதிப்பிற்கும் பொருளுதவி செய்தார்கள். இக்காலத்தில் இவர்கள்செய்த இவ்வுதவி மிகப்பாராட்டற்பாலது.

இதனை ஆராய்ந்தபொழுதும் பதிப்பித்தபொழுதும் மயிலாப்பூர் P.S. ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதராகிய ம-ா-ா-ஸ்ரீ இ. வை. அநந்தராமையரவர்கள் உடனிருந்து அன்புடன் உதவிசெய்தார்கள்.

இந்நூலாசிரியர் தெய்வத்தன்மை உள்ளவராதலாலும் வேறு பிரதிகளின் உதவியின்மையாலும் எழுதுவோராற் பிழைபட்டுப் பொருள் விளங்காத சிலவற்றைத் திருத்துவதற்கு அஞ்சிப்பிரதிகளில் இருந்தவாறே பதிப்பிக்கலானேன.

நாவுக் கரசு நரலையமுந் தாதெடுத்த
சேவுக் கரசு சிவக்கொழுந்து - யாவுக்குஞ்
சான்றாந் தலங்குமுதல் சம்புகடை ஞாழலில்வாழ்
தோன்றாத் துணையே துணை.

காளயுக்தி ஹு
மாசிமீ உஎ உ
திருவேட்டீசுவரம்பேட்டை.

இங்ஙனம்,
வே. சாமிநாதையன்.
10—3—19.

உ

# தேவாரம்

---

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

*பண் - செவ்வழி.*

**திருச்சிற்றம்பலம்.**

முன்னைநின்றமுடக்கான்முயற்கருள்செய்துநீள்
புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்
றன்னைநின்றுவணங்குந்தனைத்தவமில்லிகள்
பின்னைநின்றபிணியாக்கையைப்பெறுவார்களே (க)

கொள்ளிநக்கபகுவாயபேய்கள்குழைந்தாடவே
முள்ளிலவம்முதுகாட்டுறையும்முதல்வனிடம்
புள்ளினங்கள்பயிலும்பாதிரிப்புலியூர்தனை
யுள்ளநம்மேல்வினையாயினவொழியுங்களே, (உ)

மருளினல்லார்வழிபாடுசெய்யும்மழுவாளர்மேற்
பொருளினல்லார்பயில்பாதிரிப்புலியூருளான்
வெருளின்மானின்பிணைநோக்கல்செய்துவெறிசெய்தபின்
னருளியாகத்திடைவைத்ததுவும்மழகாகவே. (௩)

போதினாலும்புகையாலுமுய்த்தேயடியார்கடாம்
போதினாலேவழிபாடுசெய்யப்புலியூர்தனு
ளாதிநாலுமவலம்மிலாதவடிகண்மறை
யோதிநாளும்மிடும்பிச்சையேற்றுண்டுணப்பாலதே. (௪)

ஆகநல்லாரமுதாக்கவுண்டானழலேந்தலை
நாகநல்லார்பரவந்நயந்தங்கரையார்த்தவன்
போகநல்லார்பயிலும்பாதிரிப்புலியூர்தனுட்
பாகநல்லாளொடுநின்றவெம்பரமேட்டியே. (௫)

மதியமொய்த்தகதிர்போலொளிம்மணற்கானல்வாய்ப்
புதியமுத்தந்திகழ்பாதிரிப்புலியூரெனும்
பதியில்வைக்கப்படுமெந்தைதன்பழந்தொண்டர்கள்
குதியுங்கொள்வர்விதியுஞ்செய்வர்குழகாகவே. (௬)

கொங்கரவப்படுவண்டறைகுளிர்கானல்வாய்ச்
சங்கரவப்பறையின்னொலியவை சார்ந்தெழப்
பொங்கரவம்முயர்பாதிரிப்புலியூர்தனு
ளெங்கரவம்மரையிலசைத்தானையடைமினே. (௭)

வீக்கமெழுமிலங்கைக்கிறைவிலங்கல்லிடை
யூக்கமொழிந்தலறவ்விரலிறையூன்றினான்
பூக்கமழும்புனற்பாதிரிப்புலியூர்தனை
நோக்கமெலிந்தணுகாவினைநணுகுங்கலோ. (௮)

அன்னந்தாவுமணியார்பொழின்மணியார்புன்னை
பொன்னந்தாதுசொரிபாதிரிப்புலியூர்தனுண்
முன்னந்தாவியடிமூன்றளந்தவனான்முகன்
றன்னந்தாளுற்றுணராததோர்தவநீதியே. (௯)

உரிந்தகூறையுருவத்தொடுதெருவத்திடைத்
திரிந்துதின்னுஞ்சிறுநோன்பரும்பெருந்தேரரு
மெரிந்துசொன்னவ்வுரைகொள்ளாதேயெடுத்தேத்துமின்
புரிந்தவெண்ணீற்றண்ணல்பாதிரிப்புலியூரையே. (௧௦)

அந்தணல்லாரகன்காழியுண்ஞானசம்
பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுட்
சந்தமாலைத்தமிழ்பத்திவைதரித்தார்கண்மேல்
வந்துதீயவ்வடையாமையால்வினைமாயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# தேவாரம்.

## திருநாவுக்கரசுநாயனார்

### திருவிருத்தம்.

### திருச்சிற்றம்பலம்.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான்மனத்துள்ளிருக்க
ஏன்றானிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே.

பற்றாய்நினைந்திடப்போதுநெஞ்சேயிந்தப்பாரைமுற்றுஞ்
சுற்றாயலைகடன்மூடினுங்கண்டேன்புகனமக்
குற்றானுமையவட்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்
முற்றாமுளைமதிக்கண்ணியினான்றனமொய்கழலே. (௨)

விடையான்விரும்பியென்னுள்ளத்திருந்தானினிநமக்கிங்
கடையாவவலமருவினைசாராநமனையஞ்சோம்
புடையார்கமலத்தயன்போல்பவர்பாதிரிப்புலியூ
ருடையானடியாரடியடியோங்கட்கரியதுண்டே. (௩)

மாயமெலாமுற்றவிட்டிருணீங்கமலமகட்கே
நேயநிலாவவிருந்தானவன்றன்றிருவடிக்கே
தேயமெலாநின்றிறைஞ்சுந்திருப்பாதிரிப்புலியூர்
மேயநல்லான்மலர்ப்பாதமென்சிந்தையுணின்றனவே. (௪)

வைத்தபொருணமக்காமென்றுசொல்லிமனத்தடைத்துச்
சித்தமொருக்கிச்சிவாயநமவென்றிருக்கினல்லான்
மொய்த்தகதிர்மதிபோல்வாரவர்பாதிரிப்புலியூ
ரத்தனருள் பெறலாமோவறிவிலாப்பேதைநெஞ்சே. (௫)

கருவாய்க்கிடந்துன்கழலேநினையுங்கருத்துடையே
னுருவாய்த்தெரிந்துன்றனாமம்பயின்றேனுனதருளாற்
றிருவாய்ப்பொலியச்சிவாயநமவென்றுநீறணிந்தேன்
றருவாய்சிவகதிநீபாதிரிப்புலியூரரனே. (௬)

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

# திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்.

## பாயிரம்.

### காப்பு

சொன்னவாறறிவிநாயகர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னிஞன் மாட மோங்கும் பாதிரிப் புலியூ ரைய
னென்னையா ளுடைய வீசன் றன்னிடத் திருந்த வோங்கற்
கன்னிமா னீன்றெ டுத்த கடம்பொழி கவுட்டு நால்வாய்ச்
*சொன்னவா றறியும் யானை துணையடி தொழுவோ மியாமே.

---

* சொன்னவாறறிவிநாயகரென்பது, இத்தலவிநாயகர் திருநாமம்; "முன்ன வாவிய பழம்பொருள் யாவையு முனிந்து, பின்ன வாவிய பெரும் பொருள் யாவையு நல்கும், பொன்ன வாஞ் சடைப் பாடலேச் சுரனருள் புதல்வன், சொன்ன வாறறி களிற் றெழிற் றுணைமலர்ச் சரணே." (திருப்பாதிரிப்புலியூர்ப்புராணம், காப்பு, உ.)

மேற்கு மதில் விநாயகர்.

நேரிசைவெண்பா.

தேனார் திருப்பா திரிக்கீழ்த் தவம்புரியுங்
கானார் குழலாள் கருத்துறைசெய் - வானூர்
குடகமதில் வீற்றிருக்குங் குஞ்சரக்கன் றென்பாற்
கிடர்*முளரி மாத ரிருப்பு. (உ)

ஸ்தலவ்ருக்ஷம்.

கட்டளைக்கலித்துறை.

அன்னை யருந்தவஞ் செய்கின்ற காலத் தருநிழலாய்க்
கன்னி வனத்தி லொருபா திரிகைதை செங்கழுநீர் [மத்தம்
மன்னு மலர்க்கொன்றை செண்பகங் கோங்குடன் ஞாழன்
புன்னை நறும்பிச்சி வெள்ளெருக் கம்புயம் பூத்ததுவே. (௩)

*முளரிமாதர் - அஷ்டலக்ஷ்மிகள்.

௩. **ஆம் பாடல்:**—கன்னிவனம் - இத்தலத்தின் திருநாமம். ஞாழல்-புலிநகக்கொன்றைப்பூ; மத்தம்-ஊமத்தம்பூ. பாதிரி,தாழம் பூமுதலியவற்றையும் பூத்ததென்பதை,இந்நூல் ௩௧, ௪௧ - ஆம் செய்யுட்களாலும், 'பன்னிரு பூமலர் பாதிரிக்கணே"(திருநகா.எ௩) எனவும், " புன்னைபுண் டரீகம் பூக்கும் பாதிரிப் புலியூர்" (பிரம சீல. உ) எனவும், "கோங்கு சண்பகம் பிச்சிவெள் ளெருக்குச்செங் குவளைதா மரைபுன்னை, தேங்கமழ்கொன்றை ஞாழலுன் மத்தங் கான் செழித்தலர் தாழம்போ, தோங்கு பாதிரி காலையு மாலையு முகைத்தவிழ்ந் துமை பூசைக்,காங்கு வேண்டிய தருணத்தி லுதவிடு மற்புதஞ் சொலற் பாற்றே" (பாடலமூல. கஉ) எனவும் வரும் இத்தலபுராணசெய்யுட்களாலு முணர்க.

## நூல்.

### ஒருபோகுமயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

பூமாலை புனைந்தேத்திப் பொன்மாலை முடிதாழ்த்துப்
பாமாலை நவின்றேத்திப் பலவமர ரடிவணங்க
வாழிமறை யொருநான்கு மண்முதலா கியவைந்து
மூழிகளும் படைத்துடைய வொருமுதல்வி யுடனிருப்ப
வெம்முடைய பவமுனியுங் கயமுனியு மிகவிமையோர்
தம்முடைய தவமுனியுங் *தாரகனுந் தனிநிற்ப
ஞானத்தின் வடிவாய நந்தீசர் பணிகேட்பக்
கானத்தின் முதலாய கன்னிவனத் தினிதுறைவோய் !

(இஃது எட்டடித்தரவு.)

வேதமுதற் றனிவிளக்கின் மெய்ஞ்ஞானச் சுடர்ச்சிகைமே
லோதமதற் கப்புறமாய் நணுகரிய வொருபொருணீ
படைத்தருள வயனாகிப் பாலித்தற் கரியாகித்
துடைத்தருள நீயாகித் தோன்றுவதுன் றொழிலாமே !

வானவரும் பூசுரரு மறைநெறியால் வகுத்தமைத்த
போனகங்க ளனைப்பலவும் புனிதமெனக் கொள்ளாது
கண்ணப்பன் மணிவாய்ப்பொற் கலசவிரைப் புனலாட்டி
யுண்ணப்பா வெனவளித்த வூனமுத முகந்தனையே !

வானவராய் நரகராய் மானிடராய் விலங்காகித்
தானவராய்ப் பிறவுமாய்த் தம்முள்ளே தடுமாறி
யெண்ணரிய பல்லுயிரு மிறந்துபிறந் துழலுமது
விண்ணவனே நீவகுத்த விளையாட்டின் கூத்தன்றோ !

(இவை மூன்றும் நாலடித்தாழிசைகள்.)

* தாரகன் - பிள்ளை; முருகக்கடவுள்.

அடையலர் திரிபுர மழலெழ வொருமுறை
வடவரை கொடுசிலை வளைவுசெய் தருளினை ;
தடவரை தொடவரு தசமுக னொருவனை
யுடலொடு முடியற வொருவிர லிறுவினை ;

(இவை இரண்டும் ஈரடி அராகங்கள்.)

அரவநெடுந் திரைக்கடல்வா யாலால மெழநடுங்கிச்
சுரர்பரவச் சிறிதிருண்ட சுந்தரகந் தரத்தினையே !
அருமுனிவ னடியிணையி லபயமென வீழ்பவன்மேல்
வருமறலி யுயிர்வீழ மறிந்துருள வுதைத்தனையே !
அனைத்துலகிற் பல்லுயிர்க்கு மாருயிரா யமர்ந்தனையே !
நினைப்பவனும் நினைப்புமாய் நினைப்பதுமாய் நின்றனையே !
வேடுருவந் தரித்தருளி விசயனுடன் பொருதனையே !
நாடறியத் திருத்தூது நம்பிவிட நடந்தனையே !
விண்ணவர்நின் றடயமிட மேல்வருவ தோராது
கண்ணருளென் றிருந்தபடி கடுவிடமுண் டருளினையே !

(இவை ஐந்தும் பெயர்த்தும்வந்த ஈரடித்தாழிசைகள்.)

சொரிமத கரியை யுரித்தனை
சுரநதி சடையி லடக்கினை
பொருபுலி யதளை யுடுத்தனை
பொறியர வரையி லசைத்தனை.

(இவைநான்கும் முச்சீரோரடி அம்போதரங்கங்கள்.)

மறைவிரித்தனை
பொருடொகுத்தனை
மழுவலத்தினை
மானிடத்தினை

பிறைமுடித்தனை
பவமடித்தனை
பெண்ணுமாயினை
யாணுமாயினை.

(இவை எட்டும் இருசீரோரடி அம்போதரங்கங்கள்.)

எனவாங்கு, (இது தனிச்சொல்.)

மெய்ம்மொழி வேதியர் செய்ம்மலி வேள்வியிற்
பண்ணுறு நறும்புகை விண்முகில் காட்டுஞ்
சீத வார்பொழிற் பாதிரிப் புலியூ
ரருமறை முதல்வநின் றிருவடி பரவுதுந்
தீநெறிப் படரார் செம்மைநீ பணித்த
தூநெறிச் சென்ற தொண்டரிற் கூட்டா
தொழியாப் பிறவியுட் கூட்டினு
மழியா வன்புதந் தருளுக வெனவே.

(இஃது எட்டடி ஆசிரியச்சுரிதகம். க)

## நேரிசைவெண்பா.

வேத மொழிவிசும்பு மேனி சுடர்விழிமண்
பாதந் திருப்பா திரிப்புலியூர் - நாதர்
பரமாம் பரமாம் படுகடலெண் டிக்குங்
கரமா மவர்க்குயிர்ப்பாங் கால். (உ)

## கட்டளைக்கலித்துறை.

கால்கொண்டு கண்ணழல் கொண்டுகை யிற்றிரி சூலமென்னு
வேல்கொண்டு காலனை வேளினை வெற்றிற லந்தகனைச் [ம்
சேல்கொண்ட வாவித் திருப்பா திரிப்புலி யூரிற்செல்வர்
பால்கொண்ட நீற்ற ருதைத்ததுஞ் சுட்டதும் பாய்ந்ததுமே.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாய்ந்தநீர் பரந்த வேணிப் பாதிரிப் புலியூ ரைய
ராய்ந்தநூல் வரைந்த வேட்டுக் கஞ்சனக் காப்புச் சாத்த

---

உ. பரம அம்பரமாம் படு கடல் - மேலான ஆடையாகும் ஒலிக்கின்ற கடல். இச்செய்யுளும், "பாடுவார் பாடும்" என்னும் கசு-ஆம் செய்யுளும் தமிழ்நாவலர் சரிதையில் எடுத்தாளப்பட்டுள்ளன.

௩. அந்தகன் - அந்தகாசுரன். இச்செய்யுள் நிரனிறை.

வாய்ந்தநீர்க் கடல்க ளாற்று மற்றவர் பெருமை மண்மேற்
றேய்ந்தநூற் சிறிது வாணுண் மனிதரோ செப்பு வாரே.(௪)

## தவம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சென்று பூதலத் தெல்லை காணிலென்
றெய்வ மாநதித் துறைக ளாடிலென்
னின்று தீயிடைத் தவமி யற்றிலென்
னீறி டார்களே நிரய வாணரே
கொன்று தீவினைக் கொடுமை யாளருங்
கோதி லஞ்செழுத் தோதி நீறணிந்
தின்று பாதிரிப் புலிசை சேர்வரேல்
யாவ ராயினுந் தேவ ராவரே. (ரு)

## தலைவியிரங்கல்.

### எழுசீராசிரியச்சந்தவிருத்தம்.

தேவா சுரர்பிற ருரகா திபர்செய
லறியா தயர்வுறு சிறியோமைக்
காவா யெனவெறி கடல்வாய் விடநுகர்
கருணை லயர்பயில் கடைஞாழற்
பூவா தொழிகில குரவா திகண்மயில்
செயலோ விதுகுயில் பொழிறோறுங்

அஞ்சனக்காப்பு - மைக்காப்பு. நூல் - நூலறிவு; செயற்கையறிவு. சிறிதுவாணுள் - சில்வாழ்நாள்.

ரு. "பரவை யாடினு நதிக ளாடினும்" என்னும் திருவருணைக்கலம்பகச்செய்யுள், இதன்கருத்தைத்தழுவிவந்துள்ளது.

கூவா வதிவன வவரோ வருகிலர்
கொடியே னெதுசெய்து முடிவேனே.

(தலைவி பருவங்கண்டு புலம்பல். சு)

**சந்தக்கலிநிலைத்துறை.**

முடியுடை யமரரு முனிவரு முறைமுறை தொழுதோதிக்
கடியுடை விரைமலர் பலகொடு வழிபடு கடைஞாழற்
கொடியுடை விடையினர் குலமறை முடிமிசை வருகோலத்
தடியுடை யவரடி பணிபவ ரெமபுர மடையாரே. (எ)

**சந்தவிருத்தம்.**

அடல்விடை தன்னை யுகைத்தா
ரதளுரி தன்னை யுடுத்தா
ரரவுகள் பின்னி முடித்தா
ரழகிய ரென்ன விருப்பார்
மடவரன் மன்னு மிடத்தார்
மறலியை முன்ன முதைத்தார்
மருவிய கன்னி வனத்தார்
மலர்மிடை புன்னை நிழற்கீ
ழுடலிடை யென்னுயி ரொப்பீ
ருருவுடை யன்ன நிகர்ப்பீ
ரொளிமதி யன்ன முகத்தீ
ரொருமயில் வன்ன நிகர்ப்பீர்
தடமுலை துன்ன நினைத்தே
தளர்வுறு மென்னுயிருக்கோர்
சரணுள தென்ன வுரைப்பீர்
தனிபடு மின்ன றவிர்த்தே.

(தலைவன் தலைவியை இரந்துபின்னிற்றல். அ)

உரகாதிபர், எழுவாய். கடைஞாழல் - இத்தலத்தின் திருநாமம்; இஃது இக்கோயிற் சிலாசாதனத்தும் காணப்படுமென்பர்.

## அம்மானை.

### கலித்தாழிசை.

இன்ன திதுவென் றிறைவன் றிறமதனைச்
சொன்னமறையுந் துணிந்திலகா ணம்மானை
சொன்னமறை யுந்துணியாத் தோன்றாத் துணையினைநங்
கன்னி வனத்திடையே காணலா மம்மானை
கண்டார் பிறிதொன்றுங் காணார்கா ணம்மானை. (௯)

### கட்டளைக்கலித்துறை.

மானுள பேதை மயிலுள சாயன் மறக்கவொட்டாத்
தேனுள வல்லி பலவுள கிள்ளை சிலமிழற்றுங்
கானுள கண்ணுதல் கன்னிவனங்கரு தாரினையும்
யானுள னெஞ்சம் பிரிவதெவ் வாறிவ் விரும்பொருட்கே.

(பொருள்வயிற்பிரியுந்தலைவன் அழுங்கல். ௧௦.)

## புயவகுப்பு.

### ஆசிரியவண்ணவிருத்தம்.

பொருள்புர மறைநாலு முறைநின்றியம்பின
புகலியர் பெருமானு மரசும்புகழ்ந்தன
புலநெறி தொடராத விதயம்புரிந்தன
புகர்முக மதவேழ வதனம்பிளந்தன
வருளுடை மலைமாதி னகலம்புணர்ந்தன
வவமதி விதிபேணு மகமன்றுசிந்தின

---

௯. தோன்றாத்துணையென்பது இத்தலத்து ஸ்வாமியின் திருநாமம்; "தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே" (திருநாவுக்கரசு நாயனார் தேவாரம், க)

௧௦. பேதைமானுள; சாயன் மயிலுளவென்க.

வழல்வழி திரிசூல வயில்வென்றிகொண்டன
வரிமுத விமையோர்க ளபயம்புகுந்தன
மருள்புரி மணிவீணை யிசைகொண்டளைந்தன
மதுகர நிரைசூழ மலர்கொன்றைதுன்றின
வரமிகு திருநீறு முழுதுந்துதைந்தன
வடிவுடை வடிகாதின் மகரங்கிடந்தன
விருள்கெட மணிநாக வலயஞ்செறிந்தன
விடம்வல மடமானு மழுவும்பொருந்தின
விகலினர் புரமாள வெரியம்புகொண்டன
வியல்பயில் கடைஞாழலிறைவன்புயங்களே.(௧௧)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புயங்களி லகன்ற மார்பிற் புரிசடைப் பரப்பிற் காதில்
வயங்கொளி நுதலிற் கையின் மருங்கினி லரையிற் றாளிற்
பயங்கொள வரவ மார்த்த பாதிரிப் புலியூ ரையர்
தயங்குநற் கொன்றைக் கின்றென் றையலா ணையலாமே.

(பாங்கிகூற்று. ௧௨)

## கோச்சகக்கலிப்பா.

மையன் மடவீர் வயற்பா திரிப்புலியூ
ரையர் திருக்கெடில மாட்டி யவர்சாந்தந்
தையன் முலைமேற் றடவாதே புன்மருந்து
செய்ய விவள்பசலை தீருமோ தீராதே.

(பாங்கிகூற்று. ௧௩)

௧௧. 'புகலியர் பெருமானு மரசும் புகழ்ந்தன' என்றார், இந்த இருவருடைய தேவாரங்களே இத்தலத்திற்குண்மையின்; ருரு, ருசு - ஆம் பாடல்களையும் பார்க்க.

௧௩. கெடிலம் - இத்தலத்தினருகே ஓடும் நதி.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தீராத விருவினையுந் தீர்த்து மேன்மை
தெளியாத மனந்தெளிவித் தன்பர் பின்னை
வாராத வகைசெய்யு மன்னன் கன்னி
வனநாதன் கடைஞாழன் மருங்கு வாய்விட்
டாராத கருங்கடலு முன்றில் வாய்நின்
றாற்றாத வன்றிலுநின் றழலே சிந்தி
யீராத வாடையுந்தந் தகன்றா ரல்ல
ரென்கொலோ தலைவர்பிரிந் திருந்த வாறே.

(தலைவிகூற்று. ௧௪)

## தலைவி இரங்கல்.

### கலிநிலைத்துறை.

இரைதேர் குருகே யெறிவார் திரையே திரைமோதுங்
கரைசேர் பொழிலே பொழில்சூழ் கழியே கண்டீரே
நரைதேர் விடையார் கடைஞா ழலிஞாண் மலரூதும்
விரைதே ரளிபோல் வினவா தகல்வார் மெய்ப்பாடே. (௧௫)

### கொச்சகக்கலிப்பா.

பாடுவார் பாடும் பரிசில் வரிசையெல்லா
மாடுவா ரன்றி யயலா ரறிவாரோ
தோடுவார் காதன்றே தோன்றாத் துணையையர்
பாடுவா ரோரிருவர்க் கிட்ட படைவீடே. (௧௬)

---

௧௬. பாடுவாரோரிருவர்-கம்பளர், அசுவதரர்; தும்புருநாரத ரென்பாரு முளர் "காதிலிரண்டுபேர்" என்பது **தில்லைக்கலம்பகம்**, ௮.

## எழுசீர்ச்சந்தவிருத்தம்.

*படைவாண் முர்ந்து விழவா லறைந்து படுவாளையுந்தி வெருவா
மடைவாய்வி ழுந்து முழவோர்மலங்கி னுடனேபிணங்கு வயல்சூழ்
சடைஞாழலொடைத பலைவாணர்தந்த கனிவாய்மடந்தை தனிநீர்
குடைவானடைந்த சுனையேதருங்கொல் குறுவேர்வரும்பு குறியே.
(சுனைவியந்துரைத்தல். கஎ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குறியா வின்ப மன்பருக்கே கொடுப்பார் திருப்பா திரிப்புலியூர்
மறியார் கையர் மலைவாழு மயிலே யனையீர் மான்கெடுத்திங்
கறியா துங்கண் மருங்கணைந்தே னழியா மயங்க விழிவேல்
டெறியா வவ்வேல் பறியாதே யேகாநிற்ற லாகாதே. [கொண்
(தலைவன் கூற்று. கஅ)

காலம். மடக்கு.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காதலா ரங்கிருந்து பொன்படைக்குங் காலங்
கதிர்முலையு மிங்கிருந்து பொன்படைக்குங் காலந்
மேதிலார் கொடியவா யலர்தூற்றுங் கால
மிளந்தென்றல் கொடியவா யலர்தூற் றுங் காலந்
தாதுலா மலர்க்கொன்றைச் சடையர்கடை ஞாழற்
சங்கரர்பொங் கரவரையார் தமதருள்போற் குளிர்ந்து
மீதுலா மதிக்கதிரு மெனக்கழலுங் கால
மெய்ந்நிறையுங் கைவளையு மெனக்கழலுங்காலம். (ககூ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காலமுங் கழிந்து மற்றைக் கடவுள ரிறந்து விண்ணு
ஞாலமுங் குலையும் போதும் பாதிரிப் புலியூர் நாதர்

* படைவாள் - கலப்பை.

கோலமுங் கூத்துக் கேற்பக் கொண்டுதிண் டோள்கள்வீசிச்
சூலமுந் திரிவித் தாடல் புரிவராச் சுடலை மீதே. (உ0)

## ஷை வேறு.

மீது படும்புர மும்புர வாணரு மென்னகை வெங்கனலிற்
றீது படும்படி வென்றவர் நின்ற திருக்கடை ஞாழலின்வா
யாது படுங்கொல் பிரிந்தவர் நெஞ்ச மிருந்தவர் நெஞ்சுருகிக்
கோது படும்படி வந்தெரி சிந்தின கொண்டலி னுண்டுளியே.

(பாங்கி இரங்கல். உக)

## களி.

### எழுசீர்க்கழிநெடிலடி இரட்டை ஆசிரியவிருத்தம்.

துள்ளித் துடித்துவரு கின்றவரு கந்தமுனி
கோசார நின்றுகொளுவத்
* தோண்டிக் குடத்தைவர வைபூச னைக்குரிய
சோமாசி யாரவர்பனங்
கள்ளுக்கு நல்லவ ரவர்க்கந்த மந்திர
மிடும்புத்தர் கஞ்சனுக்குங்
காலங் கழிந்தவர்க டென்னங்க ளுண்பவர்கள்
கடைஞாழ லுடையார் கண்முன்
றெள்ளித் தெளித்தமுது சன்னுசி நீபுதிய
தெய்வங்க ளாடுவதடா
தேவாசு ராதிபர்கள் வாமாதி பூசையி
லெடுத்துப் பொடித்த நுரையைத்
தள்ளித் தெறித்ததொரு விந்துக் கொடுப்பமிகு
சந்துட்ட ராவர்பனவர்
சாமாதி வேதமிவை வாமா கமத்திலுள
தத்வப்ர சித்தியிதுவே. (உஉ)

(பி - ம்.) * 'தோன்றி'

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இலங்கை காவல னொருபது முடிகளு மிருபது தடந்தோளு
மலங்க மால்வரை யடியினின் மடிதர மணிவிரல் பணிகொண்டார்
கலங்கள் சேர்கடல் சூழ்கடை ஞாழலங் கடவுளர் கமழ்கொன்றை
யலங்க லாலினி யென்குறை யென்மக ளதன்வண மானளே.

(செவிலி யிரங்கல். உ௩)

## ஷை வேறு.

ஆனுடைய கொடிவலத்த ரருளுடைய கொடியிடத்த
ரலர்ந்த கொன்றைக்
கானுடைய சடைமுடியர் கடைஞாழன் மருங்கொருவர்
கனிவாய் மாதே
தேனுடைய தழையுடையர் திணைப்புடையர் சிலையுடைய
ரலரே யெய்த
மானுடையர் முருகனிலும் வடிவுடைய ரிவர்க்கிதுவென்
வந்த வாறே.

(பாங்கி தலைவிக்குத் தலைவன் குறையுணர்த்தல். உ௪)

## ஊசல்.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாசக் குழலசைய வாடி ரூசல்
மகரக் குழையசைய வாடி ரூசல்.
பூசற் கயல்புரள வாடி ரூசல்
புருவச் சிலைவளைய வாடி ரூச
னேசத் தவரெவர்க்கு மரணு மண்ண
றிருப்பா திரிப்புலியூர்ச் செல்வ ரீந்த
னேசக் கழல்பாடி யாடி ரூச
னிரை[illegible] நெருசுருக வாடி ரூசல். (உரு)

## திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஊச லாடு மிடத்திலை யுறையு மிதணைத் துளரல்லர்
பேச லாவ தொருதுணையுங் காணேன் பேணூர் புரமாளப்
பூசலாடு மரன்கன்னி வனத்துப் புனத்தென் னிறைகொண்ட
மாசி லாத மணிமுறுவன் மாறு ரெங்கே போனாரே.

(தலைவன் வருங்களநாடி மறுகல் உ௪)

### ஷை வேறு.

போனக மேவிட மேறுவ தேறுடை தோல்புனை பூணரவங்
கானக மேயிட மாகிலு மாதொடு கன்னி வனத்துறைவார்
தேனகு நாண்மல ரோனெடு மான்முத லாகிய தேவரெலாம்
வானக மானவை யாளவு மேவுவர் மீளவு மாறுவரே. (உ௫)

### சந்தத்தாழிசை.

*மாறி லாமலைக் கொடிபாகர் வாவு போர்விடைக் கொருபாகர்
மாசி லாமறைத் திருநூலர் மார்பு சேருமுப் புரிநூலர்
நீறு பூசுமெய்த் தவவேடர் நேரி லாதவற் புதவேடர்
நீடு மாமதிற் புடைசூழு நேசர் பாதிரிப் புலியூரி
லாறு சூழ்துறைக் கருகாகி யாதி மாதவர்க் கரிதாகி
யாறு கோடி†கற் பகநீடி யாடன் மாமயிற் குலமேவி
நாறு தேன்மலர்ச் சுனையாடி நாடு வார்பனிக் கறைகூடி
நாளு மாமிருப் பிடமேவி நாக பூமியொப் பெனலாமே.

(இடம்பெற்றுத்தழால். உ௬)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆமாகி லவர்க்கிப்போ தகல்வ தற்றே
யகன்றிடினுஞ் சிறிதேனு மாற்றே னென்றூர்

---

* "மாறிலாமாதொருபங்கர்" (தேவாரம்) † கற்பகம் - தென்னை

தாமாகித் தனிமடவார் தவிர்க வென்றாற்
றவிர்வரோ தமைத்தவிரத் தள்ளி யுள்ளம்
போமாகிற் போகாமற் புகுந்தாட் கொள்ளும்
புனிதர்திருக் கடைஞாழல் பொருந்தா தார்போல்
யாமாமித் தனியுயிர்கொண் டிருப்போ மன்ப
ரெடுத்தவினை முடிப்பதற்கே யேகு வாரே.

(தலைமகள் வருந்தல். உக)

## நேரிசை வெண்பா.

*ஏகாய மென்முலைமே விட்டா ரிடைகெட்டே
ஞகாய மென்ற தலர்புனைந்தார் - மாகாயக்
கைம்மானைச் செற்றார் கடைஞாழ லேயனையீ
ரெம்மானைத் தாய்மா ரிரந்து.

(தலைமகன் கூற்று. ௨0)

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இரவ லாளருக் குதவ மாநிதிக்
கென்று கானிடைச் சென்ற வீரர்தேர்
வரவு தாழமுற் படமு கிற்குலம்
வந்த தாமெனச் சிந்தை செய்திட
லரவ மேகலைத் தெரிவை வான்முழக்
கல்ல விம்முழக் ககில லோகமும்
பரவு பாதிரிப் புலிசை மாநகர்ப்
பரமர் கோயிலிற் பணைமு ழக்கமே.

(தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தல். ௨க.)

ஏகாயம் - உத்தரியம்.

## பிச்சியார்.

பணைம தக்கதக் கரியு ரித்தகைப்
பரமர் பாதிரிப் புலிசை நாதர்தந்
துணைம லர்த்திருக் கழல்வ ழுத்துமெய்த்
தொண்டு பாடுசெந் தொண்டை வாயினீ
ரிணைசி லைப்பிறைக் கிசைய நீறுகொண்
டிட்ட சுட்டி*நெஞ் சுட்டி யிட்டதெம்
முணர்வி ளக்கவோ †மைகவி ளக்கினீ
ருயிர்கு றைக்கவோ மயிர்கு றைத்ததே. (௩௨)

## ஷை வேறு.

குறைவிளம்ப வயன்முதலோர் காலம் பார்த்துக்
கொற்றவா யிற்புறத்து நிற்ப வேத்தி
மறைவிளம்ப வொருமுனிவன் மைந்தற் கன்பான்
மறிகடலன் றளித்தருள்வோர் வடிவார் கண்டக்
கறைவிளம்ப வருங்கருணை யெல்லை தொல்லைக்
கன்னிவனத் திருந்தவர்க்கென் கன்னி மைய
லிறைவிளம்பத் தவிருமது தவிரா தாறு
வெறிவளையீர் வெறிதொடங்கி யென்செய் வீரே.

(வெறிவிலக்கல். ௩௩)

## வஞ்சித்துறை.

என்னை யயர்த்தன
முன்னை வினைத்தொகை
கன்னி வனத்திறை
தன்னை நினைக்கவே. (௩௪)

*நெஞ்சுள் தீயிட்டது. †உணர்வு இளக்கவோ.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தன்னையா ணினைப்பத் தந்து தலையளிப் பதற்கு நாயேன்
பின்னையான் செய்யுங் கைம்மா றறிகிலேன் பெருமை யாலே
முன்னையா ரணங்க ளோதும் பாதிரிப் புலியூர் மூர்த்திக்
கென்னையாட்கொடுப்பதன்றி யேழையேனென்செய்கேனே. (௩௫)

## நேரிசை வெண்பா.

செய்ய கரிய திகழ்கண் மணிப்பாவை
யைய வரியவே யாணு - நெய்தல்
கழியெலாம் பூக்குங் கடைஞாழல் காணு
விழியெலாங் காணு விழி. (௩௬)

## தாழிசை.

விழியி னீளமொரு கிழியி லேமுடிய
வெழுதி மீளமுலை யெழுதுவீ
ரொழியு மேயிதனை நினைவு றுதுபனை
மடலி னுளவர வுரைசெய்தீர்
கழியில் வாளைவய லிடையு லாவுகடை
ஞாழ லாதிகர மானனூர்
மொழியை நேரிடையை நடையை வேறெழுத
வியலு மாகிலிது முயலுமே.
(பாங்கிதலைமகளவயவத்தருமைசாற்றல். ௩௭)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

முயலி னுறுதுய ரகல வருள்புரி
முதல்வர் வளரிள முகிழ்முலைக்

* "முன்னனின்றமுடக்கானமுயற்கருள்செய்துநீள், புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்" (திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், ௧)

கயலி னிகர்வரு நயனி யிடமகிழ்
கடவு ளுறைகடை ஞாழல்வா
யியலின் மயிலனை யவரொ டெறிதிரை
மருவி யிடையிடர் படவரும்
புயலி னழகிய குழலி நனைதுகில்
புலர வெனதுயிர் புலருமே.
(தலைவன் தலைவி இன்றியமையாமையியம்பல். கஅ)

## கட்டளைக்கலித்துறை.

புலவர்க்கருளும்பொருளுடைத்தாய்ப்புயநான்குடைத்தாய்க்
கலவக் குலமயில் பங்குடைத் தாய்க்கன்னி காவனத்தே
பலவற் புதமலர் காட்டிய கோட்டுப்பொற் பாதிரிக்கீழ்
நிலவச் சுடர் முடிக் குன்றடி யேனுக்கு நேர்பட்டதே. (கக)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண்ட ரங்க நடித்த நாளி லடுத்த நீறு பரம்பிவெண் [த்தநா
கொண்டல் வந்து படிந்த பொன்வரை யொக்கு மேனி குனி
ளண்ட முட்ட வழற்ப ரப்பு மகற்ப டுத்தகை யொக்குமெய்
கண்டதென்கடைஞாழ லாதிபர் கையில் வைத்த கபாலமே. (உ0)

## மடக்கு.

## கட்டளைக்கலிப்பா.

பாலற் கீவரப் பாலின் பரப்பையே
படர்ச டாடவிப் பாலின் பரப்பையே
யால முண்ப ரயிலம் புரக்கவே
யரணி லெய்வ ரயிலம் புரக்கவே
கோல மல்லது பாடல சாகையே
கூத்தர் மேவுபொற் பாடல சாகையே

காலந் தோறுந் தரும்பிற போதுமே
காண லாங்கடை ஞாழலெப் போதுமே. (சக)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஞாழலிற் போது தத்தந் தலைப்பெய்து நறும்பூந் தாழைச்
சூழலுக் கருகே சோதி பாதிரிப் புலியூர்ச் சோலை
நீழலிற் பன்மான் சூழ நின்றமா னென்றுக் குள்ளந்
தாழலிற் பெரிய மேன்மை யழிவதோ தக்க வாறே.

(கற்றறிபாங்கன் கழறல். சஉ)

## மதங்கு.

## எழுசீர்க்கழிநெடிலடி இரட்டையாசிரியவிருத்தம்.

தக்கனென்று தலைக்குலைத்தவ ரங்கிருக்க விருப்புடைத்
தையல்பங்குடையையர்செய்யதழற்பொறித்தறுகட்பனைக்
கைக்க ருங்களி றென்றுரித்த கரத்தர் தென்கடை ஞாழலெங்
காளகண்டர் திறம்புகழ்ந்தெதிர் மீளவிட்ட பதத்திடைப்
புக்குநின்று புரிந்தரங்கின டந்துவந்து புகுந்துகைப்
போதெடுத்துநடித்துவாண்முகமீதெடுத்திருகாதின்மேன்
மைக்கருங்கயல் சென்றுமீள மதங்கிதாள விதங்களால்
வந்தசாதி யெடுக்கின்மாமறை தந்தசாதிமயங்குமே. (சங)

## தாழிசை.

சாதிபேத விகற்பமாவன நற்புதாதி சடங்கள்சந்
தர்ப்பமல்லது தத்வபேத மநேகமாவ தணுக்குளே
நீதிநீதி யெனக்களித்து நினைக்கநின்ற வனைத்தினு
நிற்பதொன்றுள தென்றுநாமு னிருந்தமேம் வரைப்புறத்
தாதிதென்கடை ஞாழலாதி யகன்றருமி யரிக்கெப்தா
னன்பரான பசுக்கள்பாச மறுக்குமத்த வராகமெய்

சோதிஞான முரைக்கவந்தது சாதியேதிது நிற்கநீ
சுத்தஞக வனுக்ரகித்தது மித்தையேநினை நித்தமே. ()

## தவம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நித்தில முறுவற் பவழவாய்ப் பிறழுங்
கயல்விழி நிரைவளை யிடமாக்
கைத்தலத் திருந்த புள்ளிமான் மறியக்
* கடிலமா நதியதன் வடபாற்
செய்த்தலைக் குவளை மகளிர்கண் காட்டுந்
திருக்கடை ஞாழலி லிருந்த
பைத்தலைத் துத்திப் பணியணி யாரப்
பரமர்தாள் பணிவது வரமே. (சஙு)

## மறம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வரிக்கறையா னரித்தபனஞ் சருகோ தூதா
மண்ணரசர் திருமுகமாய் வந்த தெங்க
ளரிக்கயல்வாள் விழிக்குயிலைத் தருகவென்று
லவனிதன்மேற் பரிசமழ கியதே யன்றோ
கரிக்கரட வரைபடுத்த கன்னி காப்புக்
கருவேடன் மகன்புணர்ந்த பெருவே டன்பெண்
டிருக்குலமென் றறிந்திலனோ நன்று வென்றிச்
சிலைகொடுவா தலைகொடுவந் திடுவ தற்கே. (சசு)

* கடிலமாநதி - கெடிலமஹாநதி.

## ஷை வேறு.

இடிக்குமெரு தொன்றுதணி லேறிவரை மார்பத்
தென்புவரி யாமையொ டிலங்கெயி றழுந்தக்
கடிக்குமர வங்களு மணிந்துபலி கொள்ளக்
கன்னிவன நாதர்கடை யின்புற நடந்தா
லடிக்குமது மாலைபுனை வார்குழலின் மீதே
யாரமணி வார்முலையி லஞ்சன மளிப்பார்
வடிக்குநெடு வேல்விழியின் மென்களப முய்ப்பார்
வல்லியர் தொடங்குவன சொல்லமுடி யாவே. (சள)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சொல்லொன்று கவிக்கரசைத் துகில்புனையா தவர்கடலிற்
றொடுத்து விட்ட
கல்லொன்று புணையாக்கிக் *கரையேற்றும் பிரான்கன்னி
வனமே யன்னீர்
வில்லொன்றை நுதலாக்கி விழியிரண்டைச் சரமாக்கி
வேளை வாளா
நில்லென்று நீரேபோ யவனுண்மை தனைச்செலுத்தி
நிற்கின் றீரே. (தலைவன் கூற்று. சஅ)

## சந்தவிருத்தம்.

நினைபவர் தீவினை யானதுரந்தவர்
நிலநெடு வானுல காள வரந்தரு
நிருமலர்பாதிரி நீழலமர்ந்தவர்
நிரைவளை வாணகை மாதொருபங்கினர்

* கரையேறவிட்டவரென்பது இத்தலத்தில் ஸ்வாமியின் திருநாமம்; திருநாவுக்கரசுநாயனாரைக் கடலினின்றும் கரையேறவிட்டதுபற்றி இது வழங்கலாயிற்று. அவர் கரையேறிய இடம் கரையேறவிட்ட குப்பமென வழங்கப்படுகின்றது.

கனமுழவோடிசை கூடநடம்புரி
கனக சபாபதி பானன் மணங்கமழ்
கழிபுடைசூழ்கடை ஞாழல்விரும்பிய
கடவுள்சேர்கயி லாயமருங்கொரு
சுனையிடையாழ்புன லாடவிழைந்திவ
ணிறைவழுவாவிழ லாயலமந்துறு
துயர்படுபோதிரு தோளி ∴ விழுந்திவ
ணிணைமுலைதோளொடு கூட முயங்குபு
வினைபுனைவார்குழ லாளையதன்கரை
மிசைவசையோடிசை யாவகைதங்தொரு
விடலைமுனேகினன் யானதுகண்டனன்
விளைவறியேனினி மேல்விதிநின்றதே.
(புனறருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல். ௪௧)

## சம்பிரதம்.

### அறுசீர்க்கழிநெடிலடி இரட்டையாசிரியவிருத்தம்.

நின்ற குலக்கிரி யெட்டையு மெட்டி
வளைப்பன் மறித்திவையே
நிலைபெறு விப்பனி நீள்வல யத்தையொர்
சிறுகடு குட்பொதிவன்
சென்று குளிப்பன் முகிற்பட லத்து
மறித்து நிலத்திழிவன்
றிகையை விழுங்குவ னிவையல வித்தை
திருந்தலர் விட்டவுழைக்
கன்று தரித்த கரத்தமு தக்கடல்
கன்னி வனப்பெருமான்

கழனினை யாதவர் புரிபெரு வேள்வி
கலங்கி நடுங்கவளைத்
தன்று கணத்தொடு சென்று திகைப்ப
வடங்க வுறுப்பழியா
வமர ஞெருத்தனை வரவு மழைப்பணி
வவனி தலத்திடையே. (ருo)

கைக்கிளை.

கலிச்சந்தவிருத்தம்.

தலைவானவர் தலைமாலைகண் மிடைதாழ்சடை மிசையோர்
கலைவான்மதி புனைவேணியர் கடைஞாழலை யுடையார்
மலைவாய்வணி தையரோபொரு மகராலய வனசத்
தலைவாய்வரு மமுதோடெழு மவரோவரு மிவரே.
(ஐயம். ருக)

தலைவியிரங்கல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வருந்தாத வகைநாங்கள் வருந்தத் தேங்கி
வளர்மாவின் றளிர்கோதி மலர்ந்த காஞ்சிக்
கருந்தாது புரைநிறத்துக் குயில்க ளாலக்
கண்டாலும் வாரார்கொல் கன்னி காப்பர்
திருந்தாதார் புரமூன்று மெரித்த மேருச்
சிலையினர்பா திரிப்புலியூர்ச் செல்வர்க் கன்பு
பொருந்தாதார் மனம்போலப் பொன்றுங் காலம்
பொருள்வேண்டி யருண்மறந்து போயி னாரே. (ருஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

போயின கைவளை வந்தது மால்புகை கின்ற துயிர்ப்படருந்
தீயின மூன்றெழு கின்றது திங்க டிருக்கடை ஞாழலின்வா

யாயின செஞ்சடை யந்தணர் கொன்றை யளித்தில ராயர்தம்வேய்
வாயின தெங்கண் மடந்தைத னாருயிர் மாரனும் வெம்பகையே.
(பாங்கிபுலம்பல். ருக)

கைக்கிளை.

## மருட்பா.

கைத்தா மரைவையார் காற்று மரைநிலத்து
வைத்தா ரிமைத்தா மரையிமைத்தா—ரித்திறத்திற்
போதுறை மகளி ரல்லர்
பாதிரிப் புலியூர்ப் பாவைய ரிவரே.
(துணிவு. ருச)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

பாவலர் பரவுந் தமிழ்மொழி யரசும் படிபுகழ் தருகாழிக்
காவலர் நிலவுங் கவுணியர் முதலும் பரவிய கடைஞாழற்
சேவலர் கொடியெஞ் சிவன்முடி யணியுந் திருமலர் தரின்வாழுங்
கோவலர் குழலுங் குளிர்மதி யழலும் மிவள்குறை சிறையாவே.
(பாங்கிபுலம்பல். ருரு)

## நேரிசையாசிரியப்பா.

நிறைபல வளந்தரு மறைபுனற் பழனத்துக்
கடல்விளிம் புடுத்த கண்ணகன் செறுவிற்
செந்நிறச் செந்நெல் வித்தி நன்னிற
வெள்ளிக் கொழுமுளை யொழுக்கித் தெள்ளிய
ரு மரதகச் செழுஞ்சுருள் விரிதரப் புரைதவ
வடிமுதற் பணைத்த கிளைய வாகி
நடுநா ளமயங் குறுகி முடியமைத்துக்
கருங்கை மள்ளர் பெரும்பகடு பூட்டிப்
பவளப் பல்கொடி முறியத் தவளச்

௧௦ சங்கின மிரியல் போகப் பங்கயச்
செழுமலர்ப் பன்முகங் கிழியக் கொழுமடுத்துக்
கதலிக் கனியின் கமழ்சேறு படுத்துப்
பதவிய சோலைப் புதுக்கோட் பலவின்
மார்ந்துறு பெரும்பழ மழையெனச் சொரியுந்
௧௫ தீந்தே னீத்தம் பாய்ச்சி மாவின்
கொழுங்கனி வண்ட லோட்டிச் செழுங்கொடி
நாறுநாட் செய்யு மாறுசூழ் வளவயற்
சீத வார்பொழிற் பாதிரிப் புலியூர்
யாமினிப் புகலுவ தெவனோ மாமுனி
௨௦ கரத்திற் கண்ணுடை யவனும் வாத்திற்
றுளி ஞட்டத் தவனும் வாள்வரிப்
புலிக்காற் பெரும்பெயர் முனியு மொலித்திரைப்
பாலின் பரவைபெற் றவனு *ஞால
மதஞ்சலி கூப்பும் பதஞ்சலி யண்ணலு
௨௫ மென்றிவர் முதலா மிருந்தவத் தலைவர்
பொன்றிகழ் புரிசடைப் புனிதனை வணங்கி
யன்ன தமையா ததனிடை யுற்றன
ரின்னு மதன்றிற மியம்பிற் பொன்மலை
வல்லி மாதவம் புரிந்தன ணல்லிசை
௩௦ நாவினுக் கரசனு ஞானசம் பந்தனும்
பாவினன் மாலையாற் பரமனைப் புகழ்ந்தனர்
பனிமதி வெண்குடைப் பருதிகுல முதல்வனு
மனுநெறி பேணு மாதி ராசன்
முயல்வடி வாகிய முனிவனை யெறிந்து
௩௫ மயலுறு தீவினை மாற்றுதற் பொருட்டால்
வடதிசை மருங்கிற் போகிப் படிபுக

ஞாலமது அஞ்சலிகூப்பும்.

பூந்தரு வேதிகை குறுகி யதன்வயிற்
செந்தீ மூன்றுஞ் செவ்விதின் வளர்ப்போர்
வீறுசால் சிறப்பின் விழுக்குடிப் பிறந்தோ
சo * ராறறு பதின்ம ரந்த ணாளர்
நீற்றொடு சிறந்த நெற்றியர் நாற்றிசை
தருமறை தெரிந்த நாவினர் பரிவொடு
சிவன்வீற் றிருந்த சிந்தையர் தவநெறி
யருளொடு தயங்கிய தன்மையர் தம்மொடு
சரு தன்னெதிர் போகாத் தண்டமிழ் வைப்பிற்
கன்னி காவனங் குறுகி யன்னவ
† ரிருமூ வறுப திசைந்த வாண்டிலங்
கொருவ ரொருதின முரிமை பூண்டு
திருக்கடை ஞாழலிற் ‡ சிவக்கொழுந் ததனை
ருo யருச்சனை செய்ய வமர்ந்தினி திருந்தன
னினையன பலவு மிடர்கெட விரித்து
விண்ணவர் புகழி னல்லது
மண்ணவர்க் கிப்பதி வழுத்தலோ வரிதே. (ருசு)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அரியானு மயனுனு மமர ரானு
மருண்முனிவர் பலரானு மளவு கூறத்
தெரியாத திருவுருவ முடைய சோதிச்
சிவக்கொழுந்தை நினைந்துருகிச் சிறந்த காதற்
றரியாத வகைபெருகப் பரமா னந்தத்
தனிக்கடல்வாய் விழுந்தெழுந்து தடங்கண் மாரி

* ஆறறுபதின்மா - மூவாறறுபதின்மா ; "பழுதிலதாண்ட ரொருமூன்றாற் றறுபதின்மர்" என்பர் பின்னும் ; சுo.

† 'இருமூவொருபது' எனவும் பாடம்

‡ சிவக்கொழுந்தென்பது, இத்தலத்து ஸ்வாமியின் திருநாமம்.

சொரியாத புனல்பெருகுந் தொண்ட ரோடுந்
தோற்றுவார் பவக்கடலை மாற்று வாரே. (ருஎ)

## கலிவிருத்தம்.

மாற்றுவார் மறலியை மலர வன்சிரத்
தூற்றுவார் கரியவ னுதிரந் தீயினைப்
போற்றுவார் பாதிரிப் புலிசை யார்தொழத்
தோற்றுவார் சுரிகுழற் *றூைகை பாகரே. (ருஅ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாக வான்மதி புனைசடை முடியினர் பாதிரிப்புலியூரின்
† மேக வாகன ரடிபணி யலரென வெங்கரி திரிகானி
ஞக வாயுமிழ் நவமணி யொளிதர நள்ளிரு டனினீவர்
தேக வாணுத லுய்கில ளையனே யிரவர லொழிவாயே.
(பாங்கி தலைமகனை இரவு வரல் விலக்கல். ருக)

## ஷை வேறு.

ஒழியாத பழந்தொண்ட ரொருமுந்நூற் றறுபதின்ம
ருளமெப் போதுங்
கழியாத சேவடியான் கன்னிவனத் தொருசிறுமான்
கவர்ந்த துள்ள
மொழியாத லம்மானின் முறுவலிள நிலவாதன்
முகத்து லாவும்
விழியாதல் கொண்டன்றி வேறொன்று லிந்தமயன்
மீட்கொ ணாதே.
(தலைவன் வேட்கை தாங்கற்கருமைசாற்றல். சுய)

* தாகைநாயகியெனபது, இததலதது அமபிகையின் திருநாமம்.
† "மேகநலூர்தியர்" (திருப்புகலூர்த்தேவாரம், திருநா.); காஞ்சிப்
புராணம், புண்ணிய கோடீசப்படலம் ஙு-ஆம் பாடலைப் பார்க்க.

## கிழவி சுவடுகண்டிரங்கல்.

### அறுசீர்க்கழிநெடிலடி இரட்டை யாசிரிய விருத்தம்.

மீளிதிருந்தடி யிங்கிவையுங்குவை
வெவ்வினை யேனுடைய
மெல்லியன்மெல்லடி வேலைகொளுந்த
விழித்துயி ருண்டுவெருங்
காளிமுனின்று நடம்புரிகண்ணுதல்
கன்னி வனப்பெருமாள்
கவுரிமனோகர ரைப்பிரியாத
கருத்துடையார் வினைபோ
லாளிமறிந்து விழுந்துகிடந்தது
மற்புத மேயிதுவு
மண்ணலிடந்திகழ் வண்ணநெடுஞ்சிலை
கால்வளை வித்ததனின்
வாளிதுரந்திட வந்துவிளைந்தது
மற்றது வெங்கதிர்வேன்
மன்னனுமங்கையு மின்னுயிரொன்றொடு
சென்ற வழிச்சுவடே. (சுக)

## மேகவிடுதூது.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வழிப்பட்ட கருமுகில்காண் முற்பட்டென் வரவுரைமின்
மலர்ந்த *புன்னை
கழிப்பட்ட புலவகற்றுங் கடைஞாழன் மருங்கிரண்டு
கயல்போ னீண்ட

"புன்னைநின்று கமழ்பாதிரிப்புலி யூருளான்" என்பது தேவாரம்.

விழிப்பட்ட புனலுந்தன் மெய்ப்பட்ட பசலையும்பொய்ப்
பட்ட *வாழிச்
சுழிப்பட்ட விரற்றளிருந் துயர்ப்பட்ட மனமுமுடைத்
தோகை யாட்கே. (கூஉ)

## ஷை வேறு.

தோகையே யனைய மாதர் துயர்படச் சுடுவெங் கானிற்
போகையே பொருளென் றெண்ணிப் பொருள்வயிற் போந்த நெஞ்சே
பாகையோர் சொல்லி பங்கன் பாதிரிப் புலியூர் பாடாச்
† சேகையோர் மனத்தர் போல மீளவுஞ் சிந்திப் பாயே.
(தலைவன் நெஞ்சொடுகிளத்தல். கூஙு)

பானலம் பொருந்துங் கண்ணார் பயிலினங் துறந்து விட்டுப்
பூநலங் கமழுங் கானற் பாதிரிப் புலியூர் வாழு
மேனவெண் மருப்ப ணிந்த வெம்மானை யிறைஞ்சு வார்மே
லானவர் பவக்க டற்குழ் சுழியினி லழுந்தார் மன்னோ. (கூச)

## கலிவிருத்தம்.

மன்ற மேயிட மாநட மாடிய
குன்ற மேகடை ஞாழலெங் கொற்றவா
சென்ற மேவல ரூர்நகைத் தீச்சுட
நின்ற மேருவின் கோடு நிமிர்ந்ததே. (கூரு)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கோடெலாமறு கான்முரன்றெழு கொய்ம்மலர்க்குளிர் சோலையின்
பாடெலாமணி வாவிபோதணி பாதிரிப்புலி யூருளார்
நாடெலாமடி யோதுவார்பெற நல்கியாதுகொ ளரிமார்
வீடெலாமுறை யேநுடைழந்தொரு வெண்டலைப்பலி கொண்டதே.()

* ஆழிச்சுழி - கடற்சுழி. † சேகு - வைரம்.

## திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொண்ட லடிப்ப வுடைந்த கடற்றிரை கோலுமணற்கரையிற்
கண்ட லடிப்பல சங்கின மொய்த்தெழு கன்னி வனப்பெருமா
னண்டர் துதித்தெழ நஞ்சு களத்திடை யன்று தரித்தவரித்
தண்டரளத்தொளிவென்றநகைக்குயில்சங்கைதவிர்த்திலரே.
(பாங்கிபுலம்பல். ௬எ)

### ஷை வேறு.

இல்லாத விடையுடைய வீணைக்கொம்பை யணைப்பான்போ
விருங்கூற் றன்ன
பொல்லாத விழிக்கொம்பைப் புயத்தணைக்கப் புரிகின்றான்
பொருவிற் காளை
கல்லாதார் மனத்தணுகாக் கடைஞாழற் சிவக்கொழுந்தைக்
கருத்துள் வைத்துச்
செல்லார்போற்பழிபெறுமோ சேர்வார்போற்புகழ்பெறுமோ
தெரிகி லோமே.
(பாங்கி தலைவன் எண்ணம் தெளிதல். ௬அ)

### ஷை வேறு.

தெருவிற் பெருயா விழவோவாத் திருவார்தருபா திரிப்புலியூ
ருருவிற் றிகழு முமைபாக ரொருவர் திருமா மலைச்சாரற்
கருவிற் குறவர் குலக்கொடியே காதலவர்தேர் வரக்காணேந்
திருவிற்புனைதாரு கண்டுநிற்பார் செய்வது யாமென் றறியேனே.
(பாங்கிகூற்று).

## நாரைவிடுதூது.

### கலிநிலைத்துறை.

ஏன மருப்பு மாமையு மார்பத் திசைவித்துக்
கான வெருக்கின் கண்ணி முடித்தார் கடைஞாழ

ஞான மணக்குந் தண்டுறை வாயென் னலனுண்டு
போன வரைக்கொண் டிவ்வழி வாராய் போதாவே. (எ0)

### வஞ்சிவிருத்தம்.

போத கத்துரி போர்வையார்
மீத கத்திகழ் மேனியார்
பாதி ரிப்புலி யூரையே
யோதி நிற்பது ஞாலமே. (எக)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஞால மனைத்து முகத்து நயன மெனப்பெயர் பெற்ற
வாலம் விழித்திடு மென்றே யமரரு முய்ந்திட லாகார்
காலன் விழப்பதம் வைத்த கண்ணுதல் கன்னிவ னத்துக்
கோல மலர்க்கொடி மார்பிற் கொங்கை முகிழ்த்திட வந்தே.
(தலைவன் தலைவி பூதறிவுடைமைமொழிதல். எ௨)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வந்தியே னின்பதமென் சிரத்தால் வர்க்கால்
வழுத்திலே னின்புகழ்தான் வரம்பு கோலிச்
சிந்தியே னென்மனத்தா லென்று முன்றன்
றிருவருளுக் கடியேனிற் சிறந்தா ருண்டோ
நந்தியே முதலாய தேவர்க் கெல்லா
நாயகனே கடைஞாழ னம்பா நின்பான்
முந்தியே துயர்கெடுக்க வெண்ணும் பேரின்
முதலடிக்கில யானன்றே முனனிற் பேனே. (எ௩)

### கு ற ம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னிய தொன்முள தென்று மூதறி பெண்டிர் தொகுப்பத்
துன்னிய நெல்லை வகுத்துத் தும்பை கமழ்ந்துள தென்னை

சென்னியில் வைத்தன ளங்கை திருந்திழை மையன்மருந்து
கன்னி வனத்துள தென்றுள் கட்டுவி கட்ட தெடுத்தே.

## ஷை வேறு.

எடுத்ததா ளண்ட கூட மிடித்ததிங் கிட்ட பொற்று
டடுத்ததா ரணியைக் கொண்டு தாழ்த்தது சூழ்த்த திக்குப்
படுத்ததோ ளெட்டும் வீசிப் பாதிரிப் புலியூர் நாத
ரடுத்ததாண் டவக்கூத்தாடக் காளிகூத்தடங்கி னாளே. (எரு)

## நிலைமண்டில ஆசிரியப்பா.

நான்மறை விளங்கின வானினம் வளர்ந்தன
வேந்த ஞோங்கினன் வான்புயல் பொழிந்தன
மறக்கிளை மாண்டன வறப்பயிர் விளைந்தன
கடவுள் பாதிரிப் புலியூர்ச் சுனைதொறு
மடலவிழ் தாமரை மலர்தலிற் சிறந்தே. (எசு)

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிறந்த வன்றிலுஞ் சேவுடை மணியுந்
 தென்ற லுந்திகழ் மன்றலம் பொதியிற்
பிறந்த சாந்தமு மாயர்தம் வேயும்
 பிறையும் வந்தன கறையுடைக் கண்ட
ரிறந்த வானவ ரென்பிணை யணியு
 மேக நாயக ரெழிற்கடை ஞாழற்
புறந்த ழைந்திடு புரிகுழன் மடந்தை
 பொங்கு வெம்முலை பொதிந்தன பொன்னே.

(கவினழிபுரைத்தல். எஎ)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னலம் பெருகிடும் பரிபுரக் கழறொழார்
 போகுவெங் கானில் வந்தீ

ரின்னலம் பெருகவின் றிரவுநீ ரிவளுட
னெம்மனைத் தங்கி நாளைக்
கன்னலுங் கதலியுங் கமுகமும் பலவுமார்
காவுசூழ் வாவி யூடே
செங்நலங் கமலமுங் திகழ்திருப் பாதிரிப்
புலிசையிற் செல்ல லாமே.

(விருந்துவிலக்கல். எக)

## வண்டுவிடு தூது.

### கட்டளைக்கலித்துறை.

செல்லவற் றேதிருப் பாதிரிக் கீழ்ச்சென்று சேரநின்று
சொல்லவற் றேயென் றுயரா வதுதனைத் தொங்கற்கொன்றை
புல்லவற் றேபுர மூன்றெரித் தாரருள் பூண்டுகொண்டு
மெல்லவற் றேயவற் கென்குறை சொல்லி விரித்தவண்டே.

## ஊர்.

### அறுசீர்ச்சந்தவிருத்தம்.

விரித்தார் மறைப்பொருள் விளைத்தார் திருக்கழன்
மிகைத்தார் புரத்தினைநகைத்
தெரித்தார் மடக்கொடி யிடத்தார் மழுப்படை
வலத்தா ரரக்கனைவிழ
நெரித்தார் திருப்பொது வினிற்பா ரிணைப்பத
நினைப்பார் கடைப்பிறவியைத்
திரிப்பார் சிரப்பரி கலத்தா ரிருப்பது
திருப்பா திரிப்புலிசையே. (அ0)

### கட்டளைக்கலித்துறை.

புலிக்கான் முனிமைந்தன் பாற்கடல் பெற்றனன் பொய்த்துவரு
கலிக்கால் புகாத கடற்கடை ஞாழலெங் கண்ணுதலே

யெலிக்கா வுலகங்கள் யாவையு மீந்தனை யின்றுநன்று
பலிக்கா நடத்தியென் றேதுயர் கூருமிப் பாரிடமே. (அக)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாதியோர் பெண்ண தாகும் பாதிரிப் புலியூ ரையர்
பூதியு மென்புந் தோலும் புயங்களில் வயங்கச் சாத்தி
யாதிநீ ளரியின் பாற்றோன் றையமேற் றருளி யாளக்
காதிய வுதிர மேற்குங் கபாலமுங் கைய தாமே. (அஉ)

## ஷை வேறு.

கைத்த கடுக்களம் வைத்தெரி கைத்தலம்
வைத்தரை யிற்கனலும்
பைத்த படத்தை யுடுத்து நடித்தவர்
பாதிரி நீழலின்வாய்
மொய்த்த குழற்கொரு கொத்தலர் வைத்திட
வண்டுகெண் மொய்த்திடினும்
பொய்த்த விடைக்கொரு பற்றிலை நெற்றியோர்
பொட்டினை யிட்டிடலே.

(தலைவன் கூற்று. அங)

## சித்து.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இட்டமேதுனக்கினியெழுந்துவாவிர்தத்திலே
யிரதமிட்டிருப்புநாகமிந்த்ரசாலமிட்டபின்
பிட்டநாபிசூதகத்தில்வேதகத்திலெம்முடைப்
பிரமயோகியாயிருந்தபின்ஞகன்கடைக்குணஞ்
சிட்டவர்க்குமுற்பவித்திடப்பெருந்தவங்களைச்
செய்துகன்னிகாவனத்திருந்தசித்தர்நாளுமே

## திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம்.

புட்டமிப்பொரிக்கறிக்குவித்துமெத்துபோசனம்
புத்திபண்ணி வைகினுமுமுத்திதந்துபோதுமே.(அச)

### கலிவிருத்தம்.

தவளப்பொடி யணிமேனியர் தருணக்கொடி வெருவக்
கவளக்கரி யுரிசெய்தவர் கடைஞாழன் மருங்கே
குவளைக்கவள் விழியொப்பன கொங்கைக்கிணை யிடையுந்
துவளப்படு மதரத்தொடு மொப்பாவன துப்பே.

(இவ்விடத்திவ்வியற்றென்றல். அரு)

### கட்டளைக்கலித்துறை.

துப்பார் சடையர் திருக்கடை ஞாழலிற் சூளையர்வாய்த்
தப்பாத வெச்சிலைத் தாராது மைந்த சடைக்கங்கையா
மப்பாற் கழுவி யறுவையி னுற்றுடைத் தாழமுங்கி
யிப்பான் முலையருந் தித்தரு வாய்நின் னெழின்முத்தமே.

(பாலனைப்பழித்தல். அசு)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மேலைமுப் புரமும் வெந்தழக் கொளுந்த மேருவில் வாங்கிய வீரா
வாலையப் பழனப் பாதிரிப் புலியூ ரம்பிகை பாவுமா ரமுதே
சோலையிற் கமழுஞ் சண்பகஞ் சாதிச் சூதமென் போதினை மோதி
மாலையிற் கழுநீர் மல்லிகை யளைந்து வந்தது மந்தமா ருதமே.

(பாங்கிகூற்று. அஎ)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மாதளை வீழ்கனிமேன் மல்லிகை முகையவிழா
மாதவி நிழலிடையே வண்டளவங்குவியாச்
சீதள மளவுமிளந் தென்ற லளைந்தபொழிற்
றிங்க டவழ்ந்ததிருப் பாதிரி நீழலுளாய்

சூதளவெனுமுலையாள் கைவளை யோடரையிற்
றூசுநெகிழ்ந்துவிழத் தூமணி யேய்மடவாள்
காதளவோடுநெடுங் கண்கடதும்பியநீர்
கடைபடுமிவளுயிரைக் காவல்செய் தருள்வாயே.

(பாங்கிபுலம்பல். ௮௮)

## கட்டளைக்கலித்துறை.

அறுகா னிறையும் பொழில்சூழ் திருப்பா திரிப்புலியூ
ரறுகா னிறையு முடியா ரடிவணங் கார்களென்ன
வறுகா லலைப்புண்ணு நாகத் தடவி வருதலஞ்சி
யறுகால் வணங்குவ னின்னடிப் போதினி லாண்டகையே.

(இரவுவரல்விலக்கல். ௮௯)

## நேரிசை வெண்பா.

ஆண்டானை யன்றயன்மா றேட வளப்பரிதா
நீண்டானை நீல மிடற்றானை - மாண்டார்க
ளென்பணிய மேனி யிறையைக் கடைஞாழன்
முன்பணிய நெஞ்சே முயல். (௯௰)

## வஞ்சிவிருத்தம்.

முயலார்வரு வார்துயர் மோதியிடுஞ்
செயலார்கடை ஞாழல் செறிந்திலர்போற்
புயலார்குழன் மீதனி பொங்கரிவை
கயலார்விழி தந்தது காதரமே.

(தலைவன் உற்றதுரைத்தல். ௯௧)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காத ரங்கத்தர் கைவளை கழன்றிடக் கயல்விழி யிணைகூர
மாதரங்கத்துக்கடுக்கையுஞ்சாந்தமுமத்தமுமிவைவைத்தார்

மீத ரங்கிடு முப்புரம் பொடிபட மேருவெஞ் சிலேவாங்கித்
தீத ரங்கிடத் திகழ்திருப் பாதிரிப் புலிசையிற் சேர்வாரே.

## நேரிசைவெண்பா.

சேதாம்பல் பூக்குந் திருப்பா திரிப்புலியூர்
வேதாந்த நாதர் வியன்கயிலே - மாதர்
மொழியா மமுத முகமா முளரி
விழியாங் கொலேபயிலும் வேல்.

(செவ்விசேப்பல். ௬௩)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேதனேப் படுவீர் பாதிரிப் புலியூர்
வேதனே விமலனே விரும்பாப்
பாதகத் தேனுக் கருளுமா ரமுதைப்
பரமனேப் பிரமனேச் சிரங்கொள்
பூதனேப் பூதப் படையனே விடைமேற்
புனிதனேக் கனிதனேப் பொதுவி
ளுதனே *நாதப் பறையனேப் பிறையார்
நம்பனேச் செம்பொனேத் தொழுமே. (௬௪)

## கட்டளேக்கலித்துறை.

தொழக்கற் றிலேதொல்லேப் பாதிரிக் கீழ்ச்சென்று சூழவந்து
விழக்கற் றிலேவிடை யோனென் கிலேமெய் யுருகியன்பா
லழக்கற் றிலேயடி யாரொடுஞ் சேர்ந்திலே யாசைபொங்கி
யெழக்கற் றிலேநெஞ்ச மேகெடு வாய்புகல் யாருனக்கே.

*"நாதப்பறையினரன்னேயெனும்" என்பது, திருவாசகம்.

## திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

யாவேயினி யிப்படி யேருடையா
செழிலார்தரு பாதிரி நீழலின்வாய்த்
தாரேர்தரு கொன்றை யணிந்ததிருச்
சடையார்கடை ஞாழலி னீடளிசேர்
நீரேர்கம ழுங்கழு நீருடனே
நிறைபன்மலர் வாவியும் விண்டலரும்
பாரேகம ழும்பொழில் சந்தனநீ
பங்கேருகம் வாழ்தரு பைந்தொடியே.
(தலைவன் தலைவியைப்புகழ்தல். கசா)

## இரங்கல்.

### அறுசீர் இரட்டையாசிரிய விருத்தம்.

பைந்துணைருங்கிள ருந்தளிருஞ்சில கோதியகோகிலமே
பண்புபடும்படி வந்தலவன்பெடை யோடுறைபூவணையே
சந்தனமுந் திகழ் சண்பகமுந்திய மாதவிசூழ்பொழிலே
சங்குதிரண்டு தருந்தரளங்குவை நீவியவார்மணலே
கந்தமரும்பு சுரும்புமுரன்றெழு காதல்விடாமடுவே
கண்டரிடம்பயின் மங்கைதவம்புரி கன்னிவளம்பதியே
யந்திபடும்பொழு தஞ்சியமென்பெடை கூடியநீள்குருகே
யன்பர்நடந்திடி லெங்கள்பெருந்துய ராயினகூறிடுமே.

### எழுசீர்ச்சந்தவிருத்தம்.

கூறு நான்மறையர் கோல மாணிடவர் கூரு நீண்மழுவர் வீரமா
லேறு சேர்கொடிய ரேக மாமொருவ ரீறி லாதகடை ஞாழலார்
பாறு சேர்தலையர் பாணி சேரலர் பாதி சேர்பிறையர் மீதுசே
ராறு சூழ்சடைய ரானை யீருரிய ராக மேயணிவர் நாகமே. (கூஅ)

# திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம்.

## அறுசீர் இரட்டையாசிரியச்சந்த விருத்தம்.

நாகம்வருக்கைவிரைகமழ் நாறுகடுக்கைமுகையவிழ்
ஞாலப்விதித்துவளர்கடை ஞாழலிடத்துமதியொரு
பாகமுடித்தசடையினர் பாதியிடத்துமலைதரு
பாவைதவத்துமுயல்வதொர் பாதிரியொக்குநிழலிடை
மேகநிரைத்தகுழலினை வீயின்முடித்தும்விழியெனும்
வேலினைவிட்டுமிளைஞரை வீழவருத்துமுலையிடை
யேகவடத்தினிடையிடை யாருமிளைப்பமதனனை
யேவியுமொத்தருலகினை யீடுபடுத்தமுயல்வரே.

(காதலன் தலைவி முதறிவுடைமை மொழிதல். ௧௧)

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முத்தினை முகந்துபவ ளக்கொடியை வாரி
மோதியிரு டண்டலை முறித்துமத குந்தித்
தத்திவரு சந்தன மெறிந்தகி லுருட்டித்
தாமரையு நீலமு மணிந்தசுட மெல்லா
மெத்திவரு கின்றகெடி லத்துவட பாலே
மெல்லிய றவஞ்செய்கடை ஞாழலை விரும்பிப்
புத்தியுட னன்புசெய்து போதுசொரி வாரைப்
புணர்ந்துபிரி யாள்விரைசெய் போதிலுறை பூவே.

முற்றிற்று.

---

இதன் பின், "மன்மத ௵ ஆனி ௴ ௧௨ உ - இது ஆனங்கூர்ப் பொய்கைப்பாக்கம் முத்தியவாத்தியார் குமாரன் முத்துக்குமாரஸாமி எழுதிநிறைவேறியது" என ஓர் ஏட்டுப்பிரதியின் இறுதியில் எழுதப்பெற்றிருந்தது.

# செய்யுள்முதற்குறிப்பகராதி.